”தட் வாஸ் நைஸ்” என்று சொல்லி கண்ணாடியை தூக்கி கண்களை அழுத்தினார் தாமஸ். ”ஸாரி, அவள் அந்த மொபைலை விடிய விடிய பார்த்துக்கொண்டிருந்தாள் என்று கேட்டபோது என் மனம் பொங்கி விட்டது” நான் ”அவளால் மீண்டும் ஒரு சொல்கூட பேச முடியவில்லை. நான் ஹலோ ஹலோ என்று கத்தினேன். அதன்பின் மொபைலை அணைத்துவிட்டேன். நேராக — சென்று ஒரு ஓட்டலில் தங்கினேன். நன்றாக தூங்கினேன்.” என்றேன்.

கார் செல்லும் பாதையை தாமஸ் கவனித்து ”இது கிராமம் மாதிரி இருக்கிறதே” என்றார். ”ஆமாம் கிராமம்தான். இங்கே ஒரு எட்டு ஏக்கர் நிலத்துடன் ஒரு வீ ட்டைவாங்கியிருக்கிறேன். எனக்கும் நீலிமாவுக்கும் எங்கள் இரவு வாழ்க்கைக்கு தனிமை தேவைப்படுகிறது” தாமஸ் ”நைஸ் பிளேஸ். சென்னைக்கு அருகில் இப்படி ஒரு இடமிருப்பதே ஆச்சரியமாக இருக்கிறது” என்றார். ”சென்னையில் இருந்து வெறும் முப்பது கிலோமீட்டர் தூரத்தில் சிறுத்தை வாழும் காடு இருக்கிறது. பலருக்கு அது தெரியவதில்லை” என்றேன்.

”மேனனிடம் சொன்னாயா?” ”அவருக்கு எழுதியிருந்தேன். அவர் பதில் போடவில்லை” என்றேன். ”அவரிடம் நான் மானசீகமாக நிறைய விவாதித்திருக்கிறேன். இப்போது இதைப்பற்றி நான் சொல்லும் வாதங்கள் எல்லாமே அவரிடம் மானசீகமாக உரையாடி உருவாக்கிக் கொண்டவைதான்.” என்றேன்.

”முதல் விஷயம் இதுதான் ·பாதர். இத்தனை தீவிரமான அனுபவங்களுக்குப் பின்னர் நான் சாதாரணமான உலகுக்குப் போய் சாதாரணமாக வாழ முடியாது. அப்படி நடிக்கலாம். மனம் இந்த உக்கிரத்தையே நாடிக்கொண்டிருக்கும் நாம் எவ்வளவு ஆழமான வாழ்க்கை வாழவேண்டும் என்று நாம் தீர்மானிக்க முடியாது.” ”உண்மைதான்” என்றார் தாமஸ்.



”மேனன் என்ன தவறு செய்தார் என்றால் அவர் கனவின் அப்பட்டத்தில் வாழ விரும்பினார். ஆனால் அந்தக்கனவு அவர் விரும்பியபடி நடக்க வேண்டும் என்றும் ஆசைப்பட்டார். யுலிஸஸ் நரகத்துக்குப் போனதைப்பற்றி என்னிடம் அவர் சொன்னார். வீ ரன் மட்டுமே ஆழத்திற்குச்செல்ல முடியும் என்றார். எனக்கு என்ன தோன்றுகிறது என்றால் மேனன் தாந்தேயின் டிவைன் காமெடியைப் படித்துவிட்டு அதைச்சார்ந்து ஒரு வரைபடம் அமைத்துக்கொண்டு நரகத்துக்குச் செல்ல முயன்றவர் என்று. ஒவ்வொரு கணமும் முற்றிலும் எதிர்பாராத ஒன்று நடக்கும்போது அதை எதிர்கொள்வதுதானே வீ ரம்”

”மேனனைவிட சுவாமிஜி இன்னும் தெரிந்து வைத்திருந்தார்” என்று தொடர்ந்தேன் ”அவர் இரவை ஒரு யானை என்றார். நூற்றுக்கு தொண்ணூறு பாகன்கள் யானையால்தான் கொல்லப்படுகிறார்கள். யானைக்குள் ஒரு காடு இருந்துகொண்டே இருக்கிறது. யானையை எவருமே முற்றிலும் கட்டுப்படுத்த முடியாது. யானை அவரை மிதித்துக்கொன்றது. ஒருபாகனை யானை கொன்றது என்பதனால் இன்னொருவன் யானைப்பாகனாக வர மாட்டானா என்ன? இறந்தவனின் மகனே வருவான் அல்லவா? இது ஒரு பெரிய சவால். இந்த கனவு வெளியின் அடியில் இன்னும் மகத்தான வெளிகள் இருக்கின்றன. என்னுடைய ஆர்வம் அந்த ஆழம் நோக்கித்தானே ஒழிய என் தலைக்குமேல் உள்ள குமிழிகளின் பரப்பை நோக்கி அல்ல”

”அது நல்ல தன்னம்பிக்கை” என்று தாமஸ் சிரித்தார். ”என்னுடைய ஒற்றை வரியே இதுதான். நான் நெடுஞ்சாலையில் நடக்கவிரும்பவில்லை, இழுத்துக்கட்டிய கம்பிமீது அந்தரவெளியில் நடக்க விரும்புகிறேன்” என்றேன் ”இந்த பயணத்தில் என் நரம்புகள் ஒரு கணம் கூட தொய்வடையாது. சாதாரணமான தருணம் என்பதே கிடையாது. ஒவ்வொரு காலடியும் ஒரு சவால். இதுதான் வீ ரனின் வாழ்க்கை”

”ஷுரஸ்ய தாரா..” என்றார் தாமஸ். ”என்ன?” என்றேன். ”ரேஸர்ஸ் எட்ஜ்”. நாவிதனின் கத்திமுனையின் கூர்மைமேல் நடப்பதுதான் ஞானத்தின் பயணம் என்பது. ”தாமஸ் மன் ஒரு நாவல் எழுதியிருக்கிறார்” என்றேன். ”ஆமாம். நான் வாசித்ததில்லை. இது உபநிஷத வாக்கியம். என் குரு ஜார்ஜ் பூதக்காட்டில் அடிக்கடிச் சொல்வார்”

”இந்த மேடுமீதுதான் என் வீ டு என்றேன். ”இரவு தனிமையாக இருக்குமே?” ”இல்லை. இந்த நகரத்தில்கூட ஒரு இரவுச்சமூகம் உண்டு. மாலையில் கண்விழிப்பவர்கள். இப்போது நாங்கள் ஏழுபேர் இருக்கிறோம்” என்றேன். ” எர்ணாகுளம் சமூகம் என்ன ஆயிற்று?” ”அவர்கள் இப்போது நாயர் வீ ட்டில் கூடுகிறார்கள். அவர் அங்கே கொண்டாட்டமாக இருக்கிறார்”

எதிரே என் வீ டு தெரிந்தது பால்கனியிலும் வராந்தாவிலும் சிவந்த ஒளியுடன் விளக்குகள் எரிந்தன. சன்னல்கள் வாசல்கள் வழியாக செவ்வொளி தீச்சுவாலை போல தெரிந்தது. ”நெய்விளக்கா?” என்றார் தாமஸ். ”இல்லை. நான் ஹாலந்தில் இருந்து வரவழைத்த விளக்குகள். நெய்விளக்கு போலவே ஒளியை அமைக்கலாம். ஒளி சன்னமாக அசைவதுபோலக்கூட வைக்கலாம்.”

தானாகத் திறந்த முகப்பு வாசலைத்தாண்டி உள்ளே சென்றேன். வீ ட்டு வாசலில் நீலிமாநின்றிருந்தாள். அவள் இளம்சிவப்பு சேலை அணிந்திருந்தாள். செவ்வொளியில் அவள் ஆறடி உயரமான தழல் போலிருந்தாள்.

**[முற்றும்]**